இராச்சியத்தை யங்கீகரிக்கும்படி பிரார்த்திக்க, இராமன் 'தந்தையின்கட்டளை யைக் கடக்கலாகாது: தந்தைகொடுத்த இராச்சியத்தை நீ பாதுகாக்கவேண்டும்: நான் வனவாசஞ்செய்யவேண்டும்' என்று நிரூபித்துச்சொல்லினான்: பின்பு இரவுகழிய, மறுநாள் பொழுதுபுலர்ந்து நித்தியகர்மாநுஷ்டானங்களைச்செய்து விட்டு இராமனுள்ளவிடத்து யாவருங் கூடினர். அப்போது பரதன் 'பிறனு டைய இராச்சியத்தை எப்படிக் கைப்பற்றலா மென்னவேண்டா: எனக்கு நீ கொடுத்த இராச்சியத்தைத் திருப்பிக்கொடுக்கிறேன்: அங்கீகரித்து அரசுபுரிக' என்று வெகுவாகச்சொல்லித் தந்தைமரணத்தைக் குறித்தும் இராமனது வனவாசத்தைக்குறித்தும் வெகுவாக வருந்தியிருந்தான்; ருத்விக்குகளும் நகரத்தவரும் தாய்மார்களும் எல்லோரும் பரதனைக் கொண்டாடி, அரசைக் கைக்கொள்ளுமாறு இராமனை வேண்டினர். பிறகு இராமன் பலவகையான தத்துவ வசனங்களால் தேற்றித் தந்தையின் கட்டளையைத் தவறாமல் இருவரும் புரியவேணுமென்று வற்புறுத்திக் கூறினான்: பின் பரதன் இராமனது தன் மையைக்கொண்டாடி, 'மதிமயங்கிப் பெண்வலையிற்சிக்கித் தருமாதிக்கிரமத் தைச் செய்தால் சற்புத்திரன் அத்தீச்செயலுக்கு இடங்கொடுக்கலாமோ? தரும முணர்ந்த நீ இப்போது கொண்டிருக்குந் தாபஸதர்மத்தைவிட்டு க்ஷத்திரியதரு மத்தை மேற்கொண்டு இராச்சியத்தைப் பரிபாலிப்பாயாக: இதுவே செய்யத் தக்க தருமம்' என்ன, இராமன் பரதனைநோக்கி, 'அரசர் விவாககாலத்தில் இராச்சியத்தைச் சுல்கமாக பிரதிஜ்ஞைசெய்திருந்தனர். சம்பராசுரயுத்தத் தில் உன்தாய் உதவியதற்காக இரண்டுவரங்கள் கொடுப்பதாக வாக்களித்தனர். அவள் அவ்வரங்களைக் கேட்க மன்னவர் தந்தனர்: ஆதலால், தருமாதிக்கிரம மில்லை. அவ்வரத்திற்குஏற்ப நான் சீதாலட்சுமணரோடு வனத்துக்கு வந்தேன்: நீ என்னைப்பற்றி மகாராஜர் கைகேயியினிடம் பட்ட கடன் தீரும்படி சத்துருக்கினனைத் துணையாகவைத்துக்கொண்டு அரசுபுரிக' என் றான். அப்போது ஜாபாலியென்னும் முனிவன் சார்வாகமதத்தை மேற் கொண்டு வெகுவாகச் சொல்லி 'இராச்சியத்தைக் கைப்பற்றுக' என்ன, இராமபிரான் ஜாபாலி கூறிய மதத்தை மிக்க சினத்தோடு வெகுவாகக் கண்டித்து வைதிகமதத்தை நிலைநாட்டினான். அப்போது வசிட்டன் ஜா பாலியின்கருத்தைத் தெரிவித்துச் சினத்தைமாற்றி, முன்னோரின் ஒழுக் கத்தை யெடுத்துக்காட்டி, 'நீயே அரசுபுரிதல் தக்கது' என்று சொல்லவும் 'தந்தையினாணைக்குக் கீழ்ப்படிவது முக்கியமேயன்றிக் குலதர்மத்தைக் கவ னித்தல் முக்கியமன்று' என்ற கருத்துத்தோன்ற இராமன் வாளாவிருக்க, மீண்டும் வசிட்டன் 'ஞானத்தைத் தருங் குரு தந்தைதாயரைக்காட்டிலும் மேலானவனாதலால், உன்தந்தைக்கும் உனக்கும் ஞானோபதேசஞ்செய்த என் வார்த்தையைமீறாமல் அரசுபுரிக' என்ன, இராமன் 'ஸமஸ்ததருமங்களைப் புரிவ தற்குஞ் சாதனமான இந்த உடலைப் பெற்று வளர்த்துப் போற்றிய தாய்தந்தை யர் ஞானாசாரியனைக்காட்டிலும் மேலானவர்; மேலும் தந்தைக்கு முதலிற் பிர திஜ்ஞைசெய்துவிட்டதனால் இப்போது அதற்குமாறாகச் செய்யத்தக்கது யுக்த

மன்று' என்றான். அப்பால் பரதன் மனந்தவித்து 'இராமன் என்மீது அருள்புரியாதிருக்கும்வரையில் இந்தப்பர்ணசாலையின் வாசலில் உணவின்றித் தருப்பத்தையிட்டு அவர்க்குக்குறுக்கே படுத்திருப்பேன்' என்று சொல்லி அங்ஙனமே செய்தான். இராமன் பரதனைப்பார்த்து 'குழந்தாய்! பிராமணன்மாத்திரம் தன்னிடம் கடன்வாங்கிக்கொண்டு ஏமாற்றப்பார்க்கிறவனிடம் இங்ஙனம் குறுக்காகப் படுத்துக்கொண்டு பீடித்துவாங்கலாமேதவிர, க்ஷத்ரியனாகியநீ இங்ஙனஞ்செய்வது தருமமன்று: எழுந்திரு. புறப்பட்டு அயோத்திசேருக' என்றனன்: பரதன் உடன்வந்தவர்களைப் பார்த்து 'நீங்களாவது என்னண்ணனைத் திருப்பமாட்டீர்களா?' என்ன, அவர்களும் 'இராமனது தருமத்திற் பிடிமானத்லைத நன்கறிந்திருக்கிறோம்: ஆகையால், இவனைத் திருப்பச்சாத்தியமில்லை' என்ன, இராமன் பரதனைப்பார்த்து, 'தருமத்திற் கண்வைத்த உன் நண்பர்களும் இவ்வாறு சொல்லுகின்றனர்: நீ க்ஷத்தியர்க்குத்தகாத காரியத்தைச் செய்தாயாதலால், பிராயச்சித்தமாக என்னையும் ஜலத்தையும் பரிசிப்பாயாக' என்ன, பரதனும் எழுந்து அங்ஙனமேசெய்து, ஜனங்களைநோக்கி, 'நான் என் தந்தையையாவது இராச்சியம் வேணுமென்று கேட்டதில்லை: தாயையும் விதிக்கவில்லை. என் அண்ணன் வனஞ்செல்ல அனுமதியுஞ்செய்யவில்லை; இராமன் தந்தையின்சொல்லைத் தவறாதுசெய்யவேணுமாயின் அவனுக்காக நான் பதினாலுவருஷம் வனவாசஞ் செய்கிறேன்: எனக்குப்பதிலாக இராமன் இராச்சியத்தையாளட்டும்: அப்போது இருவரும் தந்தைசொல்லை நடத்தியவராவோம்' என்ன, இராமன் 'தந்தை எதைச்செய்தாரோ அதை மாற்ற நமக்கு வல்லமையில்லை; சக்தியில்லாமற்போனால் ஒருவனுக்குப்பதில் மற்றொருவன் அதைச்செய்யலாம்: சக்திமானாயிருப்பவன் செய்தல்கூடாது. ஆகையால், பதினான்குவருஷம்வனவாசஞ்செய்துமுடிந்ததும் இராச்சியத்தை யொப்புக்கொள்வேன்' என்று நகரத்தவர் முதலியோரை நோக்கிச் சொல்லி, பரதனைப்பார்த்து 'மன்னவர் வார்த்தையின்படி நான் நடந்துகொண்டேனாகையால், நீ என் வார்த்தையின்படி பட்டங்கட்டிக்கொண்டு தந்தையைச் சத்தியந்தவறாதவராக்குக' என்றனன். அங்குக் கண்ணுக்குத்தெரியாமல் மறைந்திருந்த ஸித்தர்கள் தேவரிஷிகள்முதலானோர் அவ்வுடன்பிறந்தோரின் தர்மஸ்வபாவத்தை மெச்சிக்கூறி, இராவணவதத்தைவிரும்பி, பரதனைநோக்கி 'இராமன் மொழிப்படியே செய்து தந்தையைச சத்தியசந்தனாக்குக' என்றுசொல்லிச் சென்றனர். பரதன் தன்விருப்பம் ஈடேறாமலிருப்பதுகண்டு ஒளிகுன்றி, 'நீ எல்லா உலகங்களையும் பாதுகாக்கவல்லவன்: பந்துக்கள் சேனாபதிகள் முதலியோர் உன்னையே யெதிர்பார்க்கின்றனர்: நீ குலதர்மத்துக்கு மாறுபடாமல் அரசு கைக்கொள்க' என்றுசொல்லிப் பாதங்களில் வீழ்ந்து பிரார்த்தித்தான்: பரதனை இராமன் கையினாலெடுத்துப்புகழ்ந்து தன்மனவுறுதியைக்கூறி 'உன்தாயின்மீது மனத்தாங்கலின்றி நடக்கவேண்டும்' என்றான். இராமனது மனவுறுதியைக்கண்டு 'இந்தப் பாதுகைகளில் உன்பாதங்களை யிட்டு ஏறுவாயாக: இவையே எல்லாவுலகத்தின் யோகக்ஷேமத்தையும் நடத்தவல்லவை' என்ன, இராமபிரானும் தான் அவை

களின்மீது ஏறி இறங்கி அவைகளைத் தந்தனன். பரதன் அந்தப்பாதுகைகளை வணங்கி இராமனை நோக்கி 'நான் இவைகளின்மேல் ராஜ்யதந்திரங்களைவைத்துப் பட்டணத்திற்கு வெளியே வாசஞ்செய்திருப்பேன்: பதினான்குவருஷம் கழிந்ததும் வராவிடிலோ தீக்குதிப்பேன்' என்ன, இராமனும் இசைந்தானென்பது முதனூலிற் கூறியமுறையாகும். (௧௨௧௮)

௧௩௬.—திருவடிநிலையைச் சூடியவண்ணம் பரதன் கொழுதுமீளுதல்.

அடித்தல மிரண்டையு மழுத கண்ணினன்
முடித்தல மிவையென முறையிற் சூடினான்
படித்தலத் திறைஞ்சினன் பரதன் போயினான்
பொடித்தல மிலங்குறு பொலங்கொள் மேனியான்.

(இ-ள்.) அழுத கண்ணினன் - அழுத கண்களையுடையவனும், தலம் பொடி இலங்குறு பொலம் கொள் மேனியான் - நிலத்தின் புழுதி(படிந்து) விளங்குகிற அழகுகொண்ட திருமேனியுடையவனுமாகிய, பரதன்—, அடி தலம் இரண்டைஉம் - அந்தப்பாதுகையிரண்டையும், முடி தலம் இவை என - கிரீடங்களிவையேயென்று கொண்டு, முறையின் சூடினான் - முறைமைப்படி சிரமேற்கொண்டவனாய், படித்தலத்து இறைஞ்சினன் - தரையில் விழுந்துவணங்கி, போயினான் - மீண்டுசென்றான்; (எ-று.)

அடித்தலம் - திருவடிநிற்குமிடம். முடித்தலம் - சிரசினிடத்திலிருப்பது.

௧௩௭.—இதுவும் அடுத்த கவியும் பரதனுடன்வந்தவரெல்லாரும் மீண்டுசென்றமையைத் தெரிவிக்கும்.

ஈன்றவர் முதலிய வெண்ணில் சுற்றமுஞ்
சான்றவர் குழுவொடு தவத்து ளோர்களும்
[1]வான்றரு சேனையு மற்றுஞ் சுற்றற
மூன்றுநூல் கிடந்ததோண் முனியும் போயினான்.

(இ-ள்.) ஈன்றவர் முதலிய - பெற்றதாய்மார் முதலான, எண் இல் சுற்றம்உம் - அளவில்லாத பந்துவர்க்கமும், சான்றவர் குழுவொடு - பெரியோர் கூட்டமும், தவத்து உளோர்கள்உம் - தவவொழுக்கத்திலுள்ள முனிவர்களும், வான் தரு சேனைஉம் - பெருமைபெற்ற சேனையும், மற்றுஉம் - மற்றுமெல்லாச்சனங்களும், சுற்றற - (பரதனைச்) சூழ்ந்துசெல்ல, மூன்று நூல் கிடந்த தோள் முனிஉம் போயினான் - முப்புரிநூல்தங்கிய தோளையுடைய வசிட்டமுனிவனும் உடன்சென்றான்; (எ-று.)

வடமும் வடத்திற்புரியும் புரியில்நூலும் மும்மூன்றாகவே அமைந்ததாதலின், மூன்றுநூலென்று உபவீதத்துக்குப் பெயர்; "ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்" என்றார், திருமுருகாற்றுப்படையிலும். [1]மான்றருஞ்சேனையும் என்றபாடத்துக்கு, அருஞ் சேனையும் மான்று - அளவிடுதற்கு அரிய சேனையும் வருத்தத்தினால் மனம்மயங்கி என்க. (௧௨௨௦)

கூகூஎ. பண்டைநூ றெரிபரத் துவனும் போயினான்
மண்டுநீர் நெடுநகர் [1]மாந்தர் போயினார்
விண்டுறை தேவரும் [2]விலகிப் போயினார்
கொண்டறன் னூணையாற் குகனும் போயினான்.

(இ-ள்.) பண்டை - பழமையான, நூல் - வேதசாஸ்திரங்களை, தெரி - அறிந்த, பரத்துவன்உம் - பரத்துவாசமுனிவனும், போயினான் - (தனது ஆச்சிரமத்துக்குச்) சென்றான்; மண்டு நீர் நெடு நகர் மாந்தர் - மிக்க அகழிநீர் சூழ்ந்த பெரிய அயோத்தியாநகரத்துச் சனங்களும், போயினார் - மீண்டுசென்றார்கள்; விண்டு உறை தேவர்உம் - ஆகாயத்திற்கூடிய தேவர்களும், விலகி போயினார் - விலகி (த் தத்தமிடஞ்) சென்றார்கள்; கொண்டல்தன் ஆணையால் - காளமேகம்போன்ற ஸ்ரீராமபிரானது கட்டளையால், குகன்உம் போயினான்—.

வேதம் கடவுள்போல நித்திய மாதலாலும், வினையினீங்கிவிளங்கிய அறிவின் முனைவன் கண்ட முதல்நூலாதலாலும், அதற்குமுந்தினநூல் எதுவுமின்றாதலாலும், 'பண்டைநூல்' எனப்படும். விஷ்ணு என்னும் வடசொல்-தமிழில் 'விண்டு' எனச் சிதையும்; 'விஷ்ணுபதம்' என்ற ஆகாயத்தின்பெயர், இங்கு ஒரு பகுதி தொக்கு நின்றது: இதனை வடநூலார் 'நாமைகதேசே நாமக்ரஹணம்' என்பர்; விண்டு பதம் - விஷ்ணுவியாபித்த இடமென்று பொருள்படும். கொண்டல்-ஆகுபெயர். பரத்துவாசன் பரதனுடன்சென்றதாக முதனூலிற் கூறப்படவில்லை: மீண்டு வருகையில் தான் பாதுகம்பெற்றுச் செல்வதைப் பரத்துவாசமுனிவனுக்கு அறிவித்துப் பரதன்செல்வதாக முதனூலிலுள்ளது. பி-ம்:—[1]மைந்தர். [2]விரைவிற். மூன்றுநான்காமடிகள் மாறிக்கிடக்கின்றன. சிலபிரதிகளில் மூன்றுமடிக்கு 'எண்டிசைவாணருமிரங்கிப்போயினார்', 'எண்டிசையரசருமிரங்கிப்போயினார்' என்று பாடம். (கஉஉக)

கூடுக.—இதுவும், மேற்கவியும்-ஒருதொடர்: பரதன் அயோத்தி சேராது நந்தியம்பதியிற் பாதுகத்துக்கு முடிசூட்டிச் செங்கோல் நடப்பித்தல்.

பாதுகந் [1]தலைக்கொடு பரதன் பைம்புனன்
மோதுகங் கையின்கரை கடந்து முந்தினான்
போதுகுங் கடிபொழி லயோத்தி புக்கில
னோது[2]கங் குலினெடி துறக்க நீங்கினான்.

(இ-ள்.) பரதன்—,—பாதுகம் தலை கொடு - இராமபாதுகையைத் தலைமேற்கொண்டு, பை புனல் மோது கங்கையின் கரை கடந்து முந்தினான் - குளிர்ந்த நீர் வந்துமோதுகிற கங்கையின் கரையைத் தாண்டி முற்பட்டு, போது உகும் கடி பொழில் அயோத்தி புக்கிலன்-மலர்கள் சிந்துகிற நறுமணமமைந்த அயோத்தியாநகரத்திற் செல்லாதவனாய், ஓது கங்குலின் நெடிது உறக்கம் நீங்கினான்-சொல்லப்பட்ட இராத்திரியில் மிகவும் தூக்கமொழிந்து,— (எ-று.) 'இருந்தன்மேயினான்' என்பதனோடு முடியும். நீங்கினான் - முற்றெச்சம். பி-ம்:—[1]தலைக்கொண்டு. [2]க்ங்குலும். (கஉஉஉ)

கசO. நந்தியம் பதியிடை நாதன் [1]பாதுகஞ்
செந்தனிக் கோன்முறை[2]செலுத்தச்[3]சிந்தையா
னிந்தியங் களையவித் திருந்தன் மேயினு
னந்தியும் பகலுநீ ரறாத கண்ணினன்.

(இ-ள்.) நந்தி அம் பதியிடை - நந்திக்கிராமமென்னுமிடத்திலே, நாதன் பாதுகம் - தலைவனான இராமனது திருவடிநிலை, செம் தனி கோல் முறை செலுத்த - ஒப்பற்ற செங்கோலைமுறைப்படி செலுத்த, (பரதன்), அந்திஉம் பகல்உம் நீர் அறாத கண்ணினன் - இரவும்பகலும் நீர்ப்பெருக்கு இடையறாத கண்களையுடையவனாய், சிந்தையான் இந்தியங்களை அவித்து - மனத்தினால் ஐம்பொறிகளையும் அடக்கி, இருத்தல் மேயினான் - (அங்குத்) தங்கியிருத்தலைப் பொருந்தினான்; (எ-று.) நந்தியம்பதி - அயோத்திநகரத்துக்கு அருகிலுள்ளதோர் ஊர்; அம்-சாரியை. பி-ம்:—[1]பாதங்கள். [2]செலுத்துஞ். [3]சிந்தையால்.

கசக.—இராமன் சீதாலட்சுமணரோடு தென்றிசைநோக்கிச் செல்லல்.

[1]குன்றினி லிருந்தன னென்னுங் [2]கொள்கையா
[3]னின்றவர் நலிவரா [4]னேயத் தாலெனாத்
தன்றுணைத் தம்பியுந் தானுந் தையலுந்
தென்றிசை [5]நெறியினைச் சேறன் மேயினான்.

(இ-ள்.) 'குன்றினில் இருந்தனன் என்னும் கொள்கையால் - (இராமன்) சித்திரகூடபருவதத்திலுள்ளான் என்ற எண்ணத்தால், நின்றவர் - (அயோத்தியாநகரத்தில்) உள்ளவர், நேயத்தால் - (நம்மீதுஉள்ள) அன்பினால், நலிவர் - (அடிக்கடிவந்து) வருத்துவர்,' எனா-என்றுஎண்ணி, (இராமபிரான்), தன் துணை தம்பிஉம்-தனக்குத் துணையாகவுள்ள தம்பியான இலக்குமணனும், தான்உம் -, தையல்உம்-சீதாதேவியுமாக, தென் திசை நெறியினை சேறல் மேயினான்-தெற்குத்திக்கை நோக்கிய வழியை நடத்தலைப் பொருந்தினான்; (எ-று.)

சுற்றத்தவர் நண்பர் முதலிய அனைவரும் அறிந்த இவ்விடத்திலேயே இன்னமும் நாம் இருந்தால் மீண்டும் அவர்கள் அடிக்கடிவந்து நம்மை நகருக்கு மீளும்படி நிர்ப்பந்திக்கக்கூடுமென்று எண்ணி அப்பாற்செல்லலுற்றான் இராமனென்க. தம்பியும்தானும் தையலும் சேறல்மேயினான் - ஆண்பாலும் பெண்பாலும் கலந்து எண்ணிச் சிறப்பினால் ஆண்பால் முடிபைப்பெற்றன; "தானுந் தன்தையலுந் தாழ்சடையோ னாண்டிலனேல்" என்பதிற்போல. பி-ம்:—[1]குன்றினிது. [2]கொள்கைதான். [3]நின்றது. [4]நேசத்தார். [5]இராமனும். (கஉஉச)

திருவடிசூட்டுபடலம் முற்றிற்று.

அயோத்தியா காண்டம் முற்றுப்பெற்றது.

# கம்பராமாயணத்தில் அயோத்தியாகாண்டச் செய்யுண் முதற்குறிப்பகராதி.

# கம்பராமாயணத்து அயோத்தியாகாண்டத்தின் அரும்பதவகராதி முதலியன. *





* இங்குக் காட்டப்படுபவை - படலப்பெயரின்முதற்குறிப்பும், படலத்துச் செய்யுள்களினெண்ணும்.

அருத்தி-அன்பு:மந்தரை-28,குகப் 73. மகிழ்ச்சி: வனம்-20
அருந்ததிக்குச் சிலங்காட்டியவள், சித்திர-16
அருந்ததியனையாள், வனம்-8
அருந்தல், மந்திர-27
அருந்தவத்தவர், ஆறுசெல்-52
அருந்துணை யிழந்தவன்றிற் பேடை × கணவனையிழந்த கோசலை, தைல-63
அருந்துயர்ப்பெரும்பரம் பூமியைத்தாங்குவதென்பது, மந்திர-71
அருநெஞ்சஙகூருகி யோடாததே குறை, நகர-101
அருநெறி, சித்திர-30
அருப்பம்-அல்பம்: பள்ளி-40
அரும்பனையகொஙகை, தைல-11
அரும்பு, கஙகை-6
அரும்பெருமூப்பு, மந்திர-64
அரும்பெறலன்பு, சித்திர-51
அரும்பொடி, குகப்-44
அருமைநோன்புகள், நகர்-21
அருமையினுயிர்வருதல், திருவடி-59
அருவிக்கண்ணினன், ஆறுசெல்-12
அருவிசோர்குன்று × கண்ணீர் பெருக்குங் குகன்; கங்கை-54
அருவிமால்வரை, சித்திர-3
அருள் தொடர்புபற்றாதேவருவது: அளி தொடர்புபற்றிவருவது: பள்ளி-48
அருள்புரிதல், கங்கை-49
அருளககருதிற்றோ, நகர்-32
அருளிருக்குங்கட்கருமுகில்,தைல80
அருளிருப்பின் வேள்விவேண்டுமோ, மந்தரை-17
அருளினெஞ்சினன், பள்ளி-98
அருளுடைத்தவம், மந்திர-27
அருளுதல் - அருள்கொண்டுகொட்டுதல், சித்திர-16
அருளுதிரென விடைகேட்டல், கங்கை-64
அருளுவீர்-சொல்வீர், பள்ளி-62
அரையில்தாழவிட்ட செந்தோலன், கங்கை-31
அரைவீக்கியவான், கங்கை-87
அல்-இரவு, ஆறுசெல்-58
அல்செறிந்தன்னநிறம்,கங்கை-29
அல்லல்-துன்பம்: வனம், 27,42; திருவடி-56
அல்லலினழுந்துதல், ஆறுசெல்-22
அல்லையாண்டமைந்தமேனி யழகன், குகப்-42
அலக்கண்-துன்பம், கைகேசி-14
அலகம்பு, கங்கை 8
அலகைகளுடகம் நடிப்பன, திருவடி-33
அலங்கல்-மாலை: திருவடி-41
அலஙகன்மன்னன், மந்திர-51
அலஙகன்மாமுடி, ஆறுசெல் 17
அலஙகன்மாாபு, மந்திர-62
அலஙகுதல்-அசைதல், திருவடி-37
அலசுதல்-வருாதுதல், மந்திர-64
அலத்தகப்பஞ்சு-செம்பஞ்சு: திருவடி-11
அலந்தலை சஞ்சலம்: மாறுபாட்டமெனினுமாம்: கைகேசி-13: "இவள்பேசசுமலந்தலையாய்"என்றார்பெரியாழ்வாரும்.
அலம்புதல் - அசைதல், ஒலித்தலென்ற பொருளிலும் வரும்: சித்திர-32
அலர்கதிர்-சூரியன்: சித்திர-26
அலர்சொரிகுழல், வனம்-7
அலர்ந்தபைஙகூழ, பள்ளி-26
அலவுதல்-அசைதல்; சித்திர 25
அலறுங்குரல், நகர்-84
அலறுதல்-கதறுதல்: நகர்-75
அலைக்க, பள்ளி-106
அலைபுனற்கிடந்தனவனைய பாம்பு, வனம்-42
அவ்வழி-அப்போது, குகப்-5
அவண்- அவ்விடம்: கைகேசி - 8, வனம்-1
அவந்தன், மந்தரை-55
அவம்-தீஙகு: தைல-65
அவரை, சித்திர-34
அவலந்தருநெஞ்சினன், நகர்-91
அவலமீதென வெழுதிய படிவமொத்தெய்துவான், திருவடி-49
அவலித்தல்-அன்புறுதல்,திருவடி-18
அவனி, மந்திர-2, குகப்-63
அவனிகாவல், நகர்-28
அவனிகாவலர், நகர்-172, மந்திர-8, பள்ளி-125

இரண்டெண்ணெருள் இ வெருவரும் ஆ × இராமலட்சுமணரைப் பிரியுஞ் சுமித்திரை, நகர்-153
இரதம், தைல-58
இரதமூர்தல், பள்ளி-93
இரவலர் நிதியை வெளவினேன், பள்ளி-99
இரவலாளர் நண்பர், பள்ளி-51
இரவி × கிகிரி: நகர்-32; சித்திர-40
இரவி இருளற்றிடவுற்றெழு ர்தல், நகர்-32
இரவி தன் கிரணத்தால் மற்றை யொளிகளை மறைத்தல்போல் பரதன் தன் புகழால் மற்றையோர் புகழை யடக்கி விடுதல், குகப்-36
இரவி தன்குலம், பள்ளி-136
இரவி மீளுதல், பள்ளி-69
இரவியிற்சுடரும் மெய்ப்புகழ், சித்திர-54 [கேசி-46
இரவுகழிதலின் வருணனை கை
இரவுநன்பகலும், பள்ளி-1
இராகவன், மந்திர-51: மந்தரை-41
இராகவனுக் கின்றுணைவன், குகப் 66
இராச்சியத்தைக் கொடுத்தில்லை யென்ற வன்கண்புலன் தாங்கியமன்னவன்போல வனம் நீங்கி உயிர்போற்றுவேனோ, நகர்-131
'இராசியத்தைத் தாங்குதல் நல்லறம், மந்திர-71
இராமபட்டாபிஷேக மகிழ்ச்சியை மன்னவன்துறவு மாற்றுதல், மந்திர-48, 93
இராமபிரான் சீதையோடுகங்கையாடுகையில் தோன்றியசிலை, கங்கை 19, 20
இராமபிரானிராடியதனுற் கங்கைக்கு ஏற்பட்ட மகிமை, கஙகை-25
இராமபிரானுக்குவசிட்டனுடைய உபதேசமொழிகள், மந்தரை-7-21
இராமற்கு அரசுஉறத்தகும் × மந்திர-48
இராமன், மந்திர-76, நகர் - 151, திருவடி-28
இராமன் இலட்சுமணனைப் புல்லுதல் × திருமால் சிவபெருமானைப் புல்லுதல்; நகர்-148

இராமன் இறந்த தசரதனைக் குறித்துப் புலம்புதல், திருவடி-60
இராமன் இன்பமும் அமுதமுமானவன், கங்கை-11
இராமன் உன்கிளை எனதென்னல்; கங்கை-76
இராமன் உன்னுயிர்க்கென யுன்னுயிர்க்கெலாம் நல்லன், மந்திர-40
இராமன் காடு செல்லுதற்காக உயர்திணைப் பொருளும் அஃறிணைப் பொருளும் அழுதல், நகர்-99
இராமன் கானகஞ்சென்றது அறம் முதலியவற்றை நினையாமையாலாகுமெனல், திருவடி-53
இராமன் குகன்கொணர்ந்த உணவுப்பொருளை உவந்து கூறியமொழி, கஙகை-43
இராமன் குகனோடு நண்புரிமை பாராட்டுதல், கஙகை-74
இராமனை கைகேயிக்குச் சமானம், நகர்-192
இராமன்கோலங்காண்கிலாமாதர் நடுங்குதல், ஆறுசெல்-30
இராமன் சாலையடைதல் × வேலை வந்துறைவிடம்மேவுதல், சித்திர-45
இராமன் சீதையின் கற்புமுதலியன துணையாகப்போதல், தைல-48.
இராமன் சீதையோடு வருதல், கங்கை-1
இராமன் தந்தைக்கு நீர்க்கடனளித்தல், திருவடி-81
இராமன் தபோதனர்க்குக்கதி, கங்கை-10
இராமன் தமது குடிலில் வாழ்வதனினும் மேம்பட்ட வர்க்கமில்லை, கங்கை 62
இராமன் தன்னுயிர்க்கென்னைபுல்லிது, மந்திர-40
இராமன் தன்னைப் பிரிதற்காகத் துயருறலாகாதெனல், கஙகை-76
இராமன்தானே பரதனுக்குத் தரைநல்கும், கைகேசி-27
இராமன் திருமுகச செல்வி தாமரை யொப்பது,கைகேயியினேவலைக் கேட்டபோது அலர்ந்த செந்தாமரையினை வென்றது; கைகேசி-[illegible]

இனிதுகுருகுதல், கங்கை-68
இனிதுறைபுரை, வனம்-27
இனிய, கங்கை-13, வனம்-2
இனியது, மந்திர-24
இனைய, மந்திர-33
இனையென், நகர்-41
ஈங்குப்போதுக, பள்ளி-2
ஈசனுலகினையழிக்கும்,ஆறுசெல்-27
ஈட்டியவற்றைப் புகழுக்காகவேட்டவரைக் கொள்கவென்றுகூவுதல், பள்ளி-31
ஈடு-வலிமை, தன்மை, நகர் 146: கங்கை-29
ஈண்ட-விரைவாக,நெருங்க:தைல-37, வனம்-32
ஈண்டியநெறி, ஆறுசெல்-59
ஈண்டு-உன்னிடத்து, இப்பொழுது: நகர் 8,22, கங்கை-40, வனம்-31
ஈண்டுதல-நெருங்குதல், ஆறுசெல்-1
ஈண்டென-விரைவாக, மந்திர-22, தைல-33, பள்ளி-41
ஈந்து, மந்திர-2
ஈமக்கடனுக்குரிய னல்லவென்ற சொல்லால் பரதன் இறந்தான்போலாகி நிலைமாறுதல், பள்ளி 133
ஈர்க்கிலா, கங்கை - 45
ஈர்த்த - இழுத்துக்கொண்டு செல்லுந் தன்மையுள்ள, பள்ளி-16
ஈர்த்தல்-இழுத்தல், திருவடி-31
ஈரம்-அன்பு, சீதக்கசிவு, வனம்-1
ஈன்றவள், ஆறுசெல்-11
ஈன்றளித்தல், திருவடி-15
ஈனம்-குறைவு, நகர்-141
ஈனுதல், வனம்-7
உகவை-சந்தோஷம்: மந்திர-81
உகுதல்-சிந்துதல், வனம்-23, 40
உச்சி, சித்திர-56
உச்சிச்சூடை, நகர்-216
உடம்புவேர்த்தல் சினக்குறி, நகர்-116
உடல்மன்னவன், வையமுயிர்: மந்தரை-17
உடற்றுதல்-போர்செய்தல், குகப்-6
உடன் போதுவன, கங்கை-72
உடுபதி, வனம் - 39
உடுபதிவேலையினுதயம்,ஆறுசெல்-24
உடையாமகுடம்-குலமுறை தவறாது வருகிற மகுடம், நகர்-57
உடை விரிந்த பூவும் மின்னுதலுமுடையன, மந்திர-58
உண்டிக்கண் - உளதாகிய துன்பம், குகப்-31
உண்டு-அங்கீகாரவார்த்தை, பள்ளி-3
உண்டை-திரளை, மந்தரை-41
உண்டையுண்டதனை யுள்ளத்துள்ளுவாள், மந்திர-41
உண்ணாநஞ்சங்கொல்கிலது, பள்ளி-85
உண்ணீர்வேட்கை, நகர் 81
உண்ணுதல்-போகம் நுகர்தல்: ஆறுசெல்-51
உண்ணுநீர்-தர்ப்பணநீர்; நகர்-56
உண்முதற்பொருட்கெலாமூற்றம் பூதங்கள், திருவடி-74
உண்மைசாகவெனவெழும், கைகேசி-21
உண்மைகாவலன் மைந்தன், நகர்-158
உணங்குதல் - வருந்துதல்: மந்தரை-45; வாடுதல்: பள்ளி-52
உணர்-உணர்வு. நகர்-146
உணர்தல்-மதித்தல்; மந்திர-7; யோசித்தறிதல்; மந்திர-9
உணர்ந்தாருள்ளம் பூத்தவடிவையொப்பான், கைகேசி-101
உணர்புகுதல்-உணர்வு அழிதல்; நகர்-146
உணர்வனையர் அமைச்சர்:மந்திர-15
உணர்வு- ஆன்மா, மந்திர-1: எண்ணம், பள்ளி-80
உணர்வுகைதர, ஆறுசெல்-13
உணர்வுடையோருணர்இறைவன் கங்கை-26
உணர்வோய்தல், நகர்-13
உத்தம, கங்கை-68
உத்தமன், மந்தரை-5
உத்தரியம் x படர்திரை,குகப்-54
உதயமால்வரை, மந்தரை-34
உதவலன், பள்ளி-114
உதவிடுதல்-படைத்தல், வனம்-22
உதவிப்புகழ் கைக்கொள்ளுதல், நகர்-62

கண்ணும்மனமும் வாழுநாள், கைகேசி-55
கண்ணுமுள்ளமும் வண்டு,மந்திர-52
கண்ணுறு -பெருமைபொருந்திய: மந்திர-4
கண்ணெனுங்கடல், திருவடி-86
கண்ணெனும் புண்டரீகம், திருவடி-54
கண்ணைமீர்தல், கங்கை-15
கண்ணெக்குந்தாமரை, கைகேசி-89
கண்ணேட்டம், நகர்-45
கண்பாவம்கடலிற்பெரிது, நகர்-105
கண் பொழிபுனல் சடாமண்டலம் நிறைந்துவழிதல், திருவடி-54
கண்மை-அருள், திருவடி-71
கண்வாரி x கடல்; நகர்-97
கண் வேண்டினு மீவேன், கைகேசி-28
கணக்கறு கரையில்வேலை, குகப்-48
கணங்கிளர் சுண்ணம், வனம்-15
கணம் - கூட்டம்; குயிற்கணம்: நகர்-181
கணமணி - தொகுதியான இரத்தினம், சித்திர-19
கணவர்பின் செலு நங்கைமார்புகு மூலகம், பள்ளி-141
கணவரைக் கொன்றவர் இல்லை, நீ கொல்லுதியோ: கைகேசி-87
கணவன்-தலைவன்; திருவடி-87
கணவன் குறையக் குறைவாள்-கோசலை; நகர்-53
கணவன் புகழுக்கு அழிவாள், நகர்-54
கணவனுட னிருத்தலாற் சீதை இடர்காணுமை, கங்கை-6
கணவனுடனிருப்பதே கற்புடையார் கடமை, நகர்-20
கணவனையிழந்த கோசலை x தெய்வ மருந்திழந்தவர்: தைல-63
கணிச்சி - கோடாலிப்படை, சித்திர-18
கணிதநூலுணர்ந்தமாந்தர், கைகேசி-77
கணிதமாக்கள், மந்தரை-1
கணிதர்-சோதிடர், மந்திர-88
கணீரருவிசோர்தல், கங்கை-53
கணை, மந்திர-55, நகர்-76
கணைப்புட்டில், திருவடி-29
கணையொடுருள்வோன், நகர்-77
கதந்தீர்வதுதம்பியைப்போர்தொலைத்தோ...என்றுனை வென்றே, நகர்-139
கதம்-கோபம்: நகர்-139
கதழா, நகர்-71, சித்திர 6
கதழ்-கொடுஞ்சினம்: விரைவுமாம்: வனம்-42
கதி-நீக்கதி; பள்ளி-106, கங்கை-65
கதிர்கொடாமரை, கங்கை-12
கதிர்நெல்லைக் குஞ்சியிற் செருகுதல், கங்கை-32
கதிர்முத்தம், சித்திர-27
கதிர்மேய்வனமுதுமேதி. கங்கை-8
கதிரவன், திருவடி-18
கதிரவன் தோன்றியதன் வருணனை, திருவடி-18
கதிரவன் முதலிய மேலோர் முறைதிறம்பலர், மந்தரை-64
கதிரிலாப்பகல் x அரசில் வையகம்: ஆறுசெல்-7
கதிருகுத்தல் - கிரணம் வீசுதல், வனம்-39
கந்தம்-கிழங்கு, வனம்-44; வாசனை, திருவடி-14
கந்தவேரதியர், வனம்-46
கந்துகொல்யானை, கைகேசி-25
கம்-நீர், கங்கை-16
கம்பநெடுங்களியானையன்ன மன்னவன், கைகேசி-15
கம்பளம் x புல், வனம்-43
கமஞ்சூல், சித்திர-2
கமலச்சீறடி, பள்ளி-89
கமலத்தண்ணல், ஆறுசெல்-43
கமலத்தவ்வை நீங்கும், மந்தரை-88
கமலத்தோன், ஆறுசெல்-26
கமலபீடம், கைகேசி-100
கமலம், ஆறுசெல்-40
கமுகு x மங்கையர் கழுத்து! மந்தரை-30
கயத்தி கீழ்மையள்; கைகேயி-48
கயப்பு-கசப்பு, மந்தரை-63
கயம்-குளம்: கைகேயி-48
கயல், கங்கை-20
கயற்கண்மாதர், குகப்-60
கயில்-கடைப்புணர்வு, கங்கை-51

கற்றறிந்தவரடங்குதல், சித்திர-35
கற்றுய்யரேல், நகர்-38
கற்றிரடோள், கங்கை-28
கற்றிலாதவர், மந்திர-42
கற்சிறுடுத்தாற் போலுங் கழல், கங்கை-32
கறங்கு × கண், மனம்; திருவடி-58
கறங்குதல், மந்திர-55; ஒலித்தல்: கைகேசி-60
கறவை, நகர்-214
கறுத்தல் - கறுக்கொள்ளுதல், வனம்-40
கறுத்தபிடறுண்டக்கடவுள்; மந்திர-79 இல்-1
கறுத்தவர்வு-கருவ்ணைசர்ப்பம்; வனம்-40
கறுத்தேயருளாய், நகர்-85
கறுவுகாதல்=கறுவுக்காதல்: கறுவோடுகூடிய காதல்; திருவடி-27
கறை, கங்கை-34, இரத்தக்கறை: ஆறுசெல்-39
கன்றுந்தாயும் போல்வது, பள்ளி-77
கன்றுபிரிகாராவின் றுயருடைய கொடி, குகப்-66
கன்றுபிரியுங்கறவை × இராமனைப்பிரியுங் கோசலை, நகர்-14
கன்றுயிரோய்ந்துகக் கறவைபாலுண்டவன், பள்ளி-105
கன்றொன்றுமா × பலயோனியுங் காத்தமனுமருமான்; நகர்-132
கன்னமூலம், மந்திர-2
கன்னி - இளமை; "கன்னி நன்மயில்"-நகர்-181
கன்னிநீக்கருங்கங்கை, கங்கை-17
கன்னிமார், ஆறுசெல்-29
கன்னியர்-இளமகளிர்:தைல-11
கன்னியர்க்கமைவருங் கற்பு, மந்திர-17
கன்னியையழிசெயக்கருதினேன் பள்ளி-110
கனகக்குன்றத் தெழில் கெடவிலகு சோதியான், கங்கை-51
கனககும்பம் × கொங்கை, மந்தரை-30
கனகமால்வரை-சித்திரகூடம், சித்திர-1
கனக்குழை, ஆறுசெல்-51
கனல் × பங்கயவனம்: வனம்-39
கனலாற்றுமஞ்சனமேகம் × இலக்குமணன் சினத்தையாற்றும இராமன்: நகர்-125
கனவு, திருவடி-18
கனற்றலை நெய்சொரிதல்; மந்தரை-63
கனி கால்நின்றியுங் கனிதல்; வனம்-43
கனிவாய் விடமுண்ணுதல், நகர்-48
காசியன், நகர்-79
காசினி-பூமி: மந்திர-93
காசு-இரத்தினம்; குகப்-40
காசுகுயின்றுயர் மகுடம், குகப்-40
காசையில்-குற்றமற்ற: ஆறுசெல்-27
காட்சி-தோற்றம்; ஆறுசெல்-37
காட்டிக்காணுதல்-நிரூபித்துக் காட்டுதல்; ஆறுசெல்-16
காட்டிலுள்ள இளைகாவற்கு நீ தானென்று இராமன் கூறுதல், கங்கை-76
காடு தலைமகனெய்துதல், பள்ளி-94
காடுநண்ணியது ஆடவர்க்குவிழிக்கோல் துளையாமற் கவசமாயது, ஆறுசெல்-50
காடுறைதல், நகர்-95
காடுறைவாழ்க்கை, ஆறுசெல்-50
காண்டகுகரி, ஆறுசெல்-59
காண்டகுதடக்கை, பள்ளி-89
காண்டகுதல், சித்திர-7
காணவந்தெய்தினுன், கங்கை-36
காணவினியதல்லாக் கோலத்தைக்காண நேர்ந்ததாற் கண்ணையீர்தல், கங்கை-45
காணுதொழிதல் - மேற்கொள்ளாதுபோதல், கண்ணுற்காணுமற்போய் விடுதல், நகர்-66
காணுதல் - உவமவுருபு: குகப்-26
காத்தல்-தடுத்தல்:நகர்-28
காத்துநல்குதல் - காத்தருளுதல்: நகர்-239
காதல் - அன்பு; விருப்பம், மந்திர-61, மந்தரை-74, கைகேசி-100, நகர்-24; ஆவல், பள்ளி-2; பக்தி; கங்கை-26
காதலன்-மகன், நகர்-11; பத்தன், கங்கை-45, 46

குகன்தான் உடன்வந்தாற் செய்யக்கூடிய உதவி, கங்கை-69-72
குகன் பிரிதற்கு அஞ்சிக் கூறிய மொழி, 59-62
குகன்வருணனை, குகப்-7,9,28,35
குகன் வீரவாதம், குகப்-10
குகனது நட்புறுதி, குகப்-15
குகனது வீரம், குகப்-15, 20
குகனன்பு, குகப்-17
குகனுனை செய்குநர், ஐயிருபத் தோடைந்தாயிரர், கங்கை-62
குகனிட்ட கட்டளை, குகப்-13
குகனோடு இராமன் நண்புரிமை பாராட்டுதல், கங்கை-74
குங்குமச்சேறு, நகர் - 184, சித்திர-48
குங்குமப்பொதி-குங்குமச்சேறு, சித்திர-6
குசை-கடிவாளம்: கைகேசி-19
குஞ்சரமனையார், கைகேசி-64
குஞ்சி,மந்திர-54, நகர்-3
குஞ்சி யற்றொடுத்தபோலும், கங்கை-32
குட்டன்-குட்டி: நகர்-117
குடபால், வனம்-19
குடர், குகப்-20, திருவடி-31
குடரிலே நெடுங்காலங் கிடத்தல்-கருப்பவாசத்திலே பன்னிரண்டு மாசம் இருத்தல், குகப்-70
குடவரை, சித்திர-40
குடிபுகுதல், சித்திர-50
குடை, நகர்-2
குடைதல்-துளைதல்: குகப்-2
குடை முதலியன நிழல் முதலியவற்றைப் பிரிதல், நகர்-208
குடையினன், வனம்-21
குண்டிகை, சித்திர-29
குண்டிகையினன், வனம்-21
குணகுன்று - உதயகிரி; கைகேசி-61
குணங்கொடன்றே காதல் [illegible] வது, குகப்-37
குணித்தல் - பெருக்குதல், மந்திர-10
குந்தம், தைல-12, பள்ளி-13
குபேரன் மானம், குகப்-45
கும்பி வயிறு, பள்ளி-86

குமரர் பட்டாபிஷேக மகிழ்ச்சியில் தம்பியரனையரானார், கைகேசி-65
குமரன், நகர்-59, 201
குமிறுதல்-குமுறுதல், கங்கை-35
குமிழ்த்தல் - தோன்றுதல், கைகேசி-68
குமுதமலர் குவிதலின் வருணனை, கைகேசி-53
குமுறிவிம்முதல், பள்ளி-97
குமுறுபால், பள்ளி-119
குயிலுதல் - செறிதல், பதிதல், தைல-9
குரகதத்தேர், குகப்-48
குரகதம்-குதிரை, குகப்-49, திருவடி-16
குரவர், மந்திர-19
குரவர் தந்தைதாயரே, திருவடி-107
குரவர்யாரினும் விஞ்சைகளுதவிய வொருவனே யுயரும், திருவடி-123
குரவரேகேள்விமுதலிய எல்லாம், திருவடி-106
குரவலர்குழலியைக்கொன்றவன், பள்ளி-99
குரவு-குராமலர்: வனம்-7
குரிசில், மந்திர-52, 73, தைல-1; கங்கை-46, பள்ளி-57
குரிசிலை விடாதசேனை, தைல-8
குரீஇயினம், சித்திர-17
குருக்கள், பள்ளி-63
குருதி, திருவடி-35
குருதியா லேழுவேலைகளுமொன்றுயிரைத்தல், திருவடி-36
குருதியாறு, திருவடி-31
குருதிவாள் × செவ்வரி பரந்தகண்: சித்திர-3
குருந்தம், வனம்-45
குரு பன்னியை நோக்கினேன், பள்ளி-110
குருமணிப்பூண், பள்ளி-38
குருவிந்தக்கல் × வானிடை மீன்: சித்திர-17
குருளை-இளமைப்பெயர்:வனம்-10
குரைத்த-பூரித்த: திருவடி-5
குலக்குரவர் - குலத்துமுன்னோர்: மந்திர-19

திருத்திக் கொணர்தல்-ஆராய்ந்து கொணர்தல், கங்கை-42

திருத்துதல்-நேர்மைபெறச் செய்தல், வனம்-20

திருந்தினர், மந்தரை-2

திருந்தினர்வயிற்செய் தவந் தேயுமோ, கங்கை-27

திருநகர், கங்கை-48, ஆறுசெல்-52

திருநாடிழப்பித்தவர்ந்தன பூணப் பிறந்தான், நகர்-149

திருநில்லாள், பள்ளி-83

திருப்பெற்றால் தவர்க்குஞ் சிந்தனை பிறிதாம், மந்தரை-70

திருமகண் மெலிகின்றாள் விடுஞ்சது x பதன்: திருவடி-52

திருமகள் கொழுநன், மந்திர-50

திருமகள் தவஞ்செய்து குறிப்பினெய்திய நாதன், திருவடி-52

திருமடந்தைகாந்தன், நகர்-95

திருமனை, மந்திர-51

திருமால் காத்தற்றொழில் மேற்கொள்ளக் காரணம், ஆறுசெல்-16

திருமால் மாயையிலடங்கினுலும் யோகிக்குத் தன்னைக் காக்கிலன் x பளிக்கறையிற் காக்கினும் பரிமுகமாக்கள் தெரிதல், சித்திர-11

திருமாலின் நாபியில் பிரமன் றோன்றிப் பல்யோனிகளையும் நான்கு வருணங்களையும் படைத்தல், நகர்-78

திருமாலுந்தியில் உலகேழு முதவுதல், வனம்-22

திருமாலைத் தொழுதல், கைகேசி-82

திருமாலையினைப்பெருந்தவஞ் செய்த கங்கை, தைல-63

திருமுகத்திற் சந்தனந் தோய்த்தல், பள்ளி-6

திருமுகத்திற் சுற்றுமண்மூடுதல், பள்ளி-6

திருமுகத்தைச் சென்னியிற் சூடுதல், பள்ளி-5

திருமுகத்தையிறைஞ்சுதல், சித்திர-5

திருமுகம், பள்ளி-4

திருமுடியோன்-சக்கரவர்த்தி: பள்ளி-2

திருமுற்றுறுதல்-செல்வப்போகம் நீங்குதல், திருவடி-18

திருவடி சூட்டு படலத்து சுக்-ஆம் பாடலோடு நகர்நீங்குபடலத்து உஉக-ஆம்பாடலை யொப்பிடுக.

திருவடித்தலந்தந்தெனல், திருவடி-136

திருவரை, ஆறுசெல்-52

திருவின் பெட்பு - செல்வப்பெருக்கு: மந்திர-13

திருவின்றிரு, நகர்-33

திருவினையகன், தைல-54

திருவினீங்கியதாமரை x மடந்தைமறுகுநீங்கிய மாடம்: நகர்-203

திருவினீங்குதல் - இராச்சியத்தை விட்டிடுதல், அரசசம்பத்தையிழத்தல்: நகர்-21, பள்ளி-118

திருவும் பூமியுஞ் சிந்தையிற் சிறத்தல், மந்திர-76

திருவுளம், கங்கை-72

திருவுளமென்கொல், கங்கை-42

திருவுறுதல், நகர்-17

திருவுறைமார்பம், மந்திர-61

திரை-அலை: மந்தரை-42, குகப்-48

திரைக்கங்கை, கங்கை-36

திரைக்கை, கங்கை-22

திரைத்தல்-அலைத்துத் தள்ளுதல்: திருவடி-31

திரைப்பெருங்கடல் x பெருந்திரளான தாயர் முதலியோர்: நகர்-187

திரையார் கடல்சூழுலகு, நகர்-33

திரையெனுங் கங்கை, கங்கை-67

திலதம், மந்தரை-86

தியளுதல் x விளங்குதல், துவளுதலுமாம்: கைகேசி-70

திறம், மந்திர-39, வனம்-6, கூறுபாடு, நகர்-15: குணம், வகை, வல்லமை நகர்-27

திறம்பல், மந்திர-11

திறம்பாதவுண்மை, திருவடி-66

திறம்புதல்-பிறழ்தல்: மந்தரை-67, கைகேசி-109

திறல்-திறன்: மந்திர-39

திறை, பள்ளி-54

தினை, கங்கை-60

திக்கலம்-ஏமப்பள்ளி, சிதை: பள்ளி-131

பழிவளர்க்குஞ் செவிலி, குகப்-70
பழுது, மந்திர-47
பழுவம், சித்திர-28
பள்ளநீர் வெள்ளமன்ன பரதன், திருவடி-118
பள்ளிப்புனல், நகர்-62
பள்ளி-உறையுள்: கங்கை-47, படுக்கை: குகப்-39
பள்ளிநீங்குதல், கங்கை-19
பளிங்கு, மந்தரை-35
பற்கள் முல்லையுங் கடன்முத்தையும் வென்றன, நகர்-233
பற்று-பொருத்து, நகர்-118; விருப்பு, நகர்-223
பற்றொருவுத்தன் பல்சூற் கவடியன், கங்கை-32
பறந்து போதுமென்று நெஞ்சினிற் பதைத்தல், பள்ளி-15
பறித்தல், வனம்-40
பறை, சித்திர-22
பறையடிப்பதுகடுவென், சித்திர-22
பன்னகப்பாயலுட் பள்ளி நீங்கினான், நகர்-167
பன்னசாலை, சித்திர 52
பன்னருந்தவம், மந்திர-2
பன்னுள், கங்கை-55
பன்னி-சொல்லி, பள்ளி-57, திருவடி-67
பன்னிரீக்கரும் பாதகம், கங்கை-17
பன்னு, பள்ளி-124
பனி × வியர்வை: மந்திர-59
பனிக்கடை, மந்திர-58
பனிசோர்தல், சித்திர-53
பனிபடர் காடு, திருவடி-129
பனையவா நெடுங்கரம், மந்திர-85
பனையினீள்கரம், நகர்-230
பாக்கியம் புரிந்திலாப் பரதன், மந்தரை-59
பாகன், தைல-57
பாகியல் செவ்வாய், கைகேசி-68
பாகு-கருப்பஞ்சாறு, பள்ளி-18, சர்க்கரை முதலியவற்றின்பாகு, கைகேசி-68
பாகு வயலுக்குப் பாய்தல், பள்ளி-18
பாங்கர்-பக்கம்: நகர்-143
பாங்கு-அழகு, நன்மை, சேமம், பக்கம்: மந்திர-3, வனம்-39, குகப்-54
பாசறைப் பொருள், வனம்-46
பாட்டொலி, மந்திர-55
பாடல், சித்திர-24
பாடல் செவியில் விழுதல் × பையரா நுழைதல்: கைகேசி-54
பாடல் வானளைதல், பள்ளி-16
பாடுகின்ற கின்னரம், சித்திர-12
பாணர் × தும்பி: வனம்-43
பாணி கை: மந்தரை-41, பாட்டு: கைகேசி-60
பாணினம்-மிஞிறு: வனம்-4
பாதகம், கங்கை-17
பாதங்கள் பெயர்தொறும் பாரும் மேருவும் உலைதல், பள்ளி-68
பாதத்தைத் திசைநோக்கித்தாழ்தல், நகர்-1
பாதபங்கயம், மந்திர-61
பாதம், கங்கை-16
பாதமலர் சிவத்தல், நகர்-98
பாதுகம், திருவடி-139
பாதுகம் கோன்முறை செலுத்துதல், திருவடி-140
பாந்தண்மிசைக் கிடந்தபார், நகர்-95
பாந்தள் × அல்குல்: சித்திர-31: காந்தள்முகை, வனம்-9
பாபமுற்றிய பேதை, கைகேசி-61
பாம்பு, வனம்-42
பாய்தல், கைகேசி-43, கங்கை-8
பாய்பெருவயிறு, பள்ளி-101
பாய்மரம் × தண்டு: குகப்-58
பாய்மா, குகப்-52
பாயல்-படுக்கை கங்கை-50
பார்-இராச்சியம்: பள்ளி-109, தேசம், பள்ளி-19
பார் என்னதாகில் யான் நினக்குத்தருகின்றேனெனல், திருவடி 112
பார்குலாஞ்செல்வ, கங்கை-45
பார்த்தவர்க்குக்கரஞ் சூடுதல், மந்திர-90
பார்ப்பு-பறவைப்பற்றின் இளமை, நகர்-214
பார்மகள், நகர்-158
பார்வதி கற்புளமங்கை, கங்கை-18
பாராளித்தல், நகர்-98

பெருநிலக்கிழத்தி நோற்றும் பெற்றிலன், கங்கை-48

பெருநிலமகள் தவம்பெற்றிலள், வனம்-25

பெரும்பகை நவையினீங்கியதனியரசு, மந்திர-25

பெரும்படை × எழுவேலை: ஆறுசெல்-25

பெரும்பரம் வகித்த நிலச்சுமை, மந்திர-64

பெரும்பனைத்தடக்கைக் களிறு, வனம் 47

பெரும்புகழ்ச்சனகி, மந்திர-42

பெரும்பெயர்க்கிரி, மந்திர-18

பெரும்பொருளிழந்தவர் × வரம்பறுதுயரினார், நகர்-176

பெருமகன், மந்திர-31

பெருமை, நகர்-31

பெற்றவன்போலக் கொற்றவர் முதலிேனோர் பரிவியற்றுதல், கைகேசி-81

பெற்றவனிருக்கப் பிள்ளை கான்புகுதல், பள்ளி-64

பெற்றி-தன்மை, காலம்: மந்திர-9, 12, நகர்-176

பெற்றோர்க்குப்பிள்ளையருமைதெரியும், நகர்-61

பெற்றோன் வேண்டுதல், மந்திர-63

பெறலருஞ்சூழ்ச்சி, மந்திர-13

பெறுவதன்முன் உயிர்நீத்தனுமிருக்க அறுபதினாயிரம் வருஷம் ஆண்டவன்மாட்டிரங்குதல் தகுதியல்ல, திருவடி-72

பேசுதல்-எண்ணுதல்: குகப்-16

பேடை, வனம்-45

பேணலர்த்துணிக்குறுவயிரவாள், பள்ளி-115

பேணுதல்-ஆதரித்தல், மந்தரை-7

பேதைமை தாய்வரும்பிறப்பு, மந்திர-33

பேதை-மாறுபாடு, மந்தரை-54

பேதுறுதல்-மனக்கலக்கமடைதல்: தைல-80

பேயீர் கணவனுயிருண்டீர், பள்ளி-76

பேயுமிரங்கால் தாய்தந்தென்னவீயும், கைகேசி-29

பேயோ தீயோ பெண்ணோ கைகேசி, நகர்-45

பேர்க்கிலா, திருவடி-66

பேர்தல் - விட்டுவிட்டுப்பிரகாசித்தல், பள்ளி-10: "பூணொளிபேர்ந்தன."

பேரவை, ஆறுசெல்-18

பேராதவாய்மைப் பெரியோன், நகர்-96

பேராவிடர், நகர்-148

பேரி - ஆறுசெல்-33, பள்ளி-9

பேரி முதலியன மகளிராமெனக் கண்புடைத்தழுதல், பள்ளி-129

பேரிமுழாமோதாமை, பள்ளி 23

பேறு, நகர்-23

பை-படம், கைகேசி-54

பைந்தொடியொருத்தி, நகர்-158

பையுள்-துன்பம், தைல-87, கங்கை-48

பொங்கணை, மந்தரை-42

பொங்கிளங்கொங்கை × தெங்கிளநீர்: ஆறுசெல்-37

பொங்குதல்-சினத்தல், கைகேசி-22: மிகுதல், கைகேசி-13: "பொங்குசோரி."

பொடி-புழுதி, ஆறுசெல்-58: பூமி-குகப்-3

பொடிசூழ்படி, நகர்-38

பொடித்தலந்தோளுறப்புரளுதல், பள்ளி-91: பொடித்தலம்-புழுதிமண்

பொடித்தல மிலங்குறும் பொலங்கொண் மேனியான்-பரதன்: திருவடி-136

பொதிதல்-மூடுதல்: நகர்-13: நெருங்குதல், ஆறுசெல்-35

பொதுமாதர்மனம் × இளவேனில்: வனம்-1

பொதுவுறநோக்குதல்-பட்சபாதமின்றிப் பார்த்தல், மந்திர-36

பொம்மல்-மகிழ்ச்சி: பள்ளி-118

பொம்மல்வாசகம், மந்திர-81

பொம்மென விம்முதல், கைகேசி-56

பொய்க்கரி கூறினேன், பள்ளி-103

பொய்த்திறத்தினன், நகர்-15

பொய்ம்மூறை, கங்கை-59

மலர்களும்இராமதுக்கத்தாற் கூம்பியிருந்தமை, தைல-51
மலர்சூடுவது சொல்லால், கங்கை-14
மலர்த்தவிசு, கங்கை-52
மலர்தூவுதல் உபசாரம், வனம்-23
மலர்நிறைமாலை, வனம்-11
மலர்ப்பாதம், மந்திரப்-45
மலர்புரையடி, வனம்-17
மலர்மகள், மந்திர-42
மலர்மிசைச்செல்வி, மந்திர-32
மலர்மேற் பெண்செய்த பாவம் மண்பாவத்தினும் பெரிது, நகர்-105
மலர்விரி கோங்கு, வனம்-12
மலரடி, திருவடி-53
மலரடி ஒருபோதும் பிரியாமை, கங்கை-71
மலரயன், ஆறுசெல்-10
மலராடை, திருவடி-9
மலராள்-சீதேவி, மந்திர-95
மலரிருந்த வந்தணனுந் தனைவணங்கு மவன், குகப்-32
மலரினும் ஒதுங்கத் தக்கிலாள்-சீதை, தைல-22
மலரீட்டம், பள்ளி-20
மலருளான் சிறுவ, திருவடி-126
மலரெனக்குளிர்தல், வனம்-40
மலை, கங்கை-71
மலைக்குவட்டுயர்வுறுமயில் x மேன்மாளிகையி லிரங்கும் மகளிர், நகர்-199
மலையில் உச்சிப்போதில் சூரியன் தங்குதல் மாமுடி மலைச்சிய தொக்கும், சித்திர-26
மலையினை மண்ணுறவழுத்திய வரலாறு, ஆறுசெல்-44
மழலைவண்டு, சித்திர-10
மழவிடை, சித்திர-7
மழு, மந்திர-79
மழுக்கள், நகர்-194
மழுவாளரசைப்பலகாலெறிவான்-பரசுராமன், நகர்-57
மழுவாளவற் கடந்த மைந்தற்கு முடிபுனைநாள் மொழிக, மந்தரை-1
மழுவாளவன் - பரசுராமன், மந்திரப்-44
மழுவாளவனிழுக்கமுறுதல், மந்திரப்-44
மழுவாளுடையான், நகர்-63
மழுவுடையவன் புகழ் குறுக நீண்டதோள், மந்திர-63
மழுவேந்துவான்-பரசுராமன், நகர்-26
மழை x கூந்தல்: மந்திர-58
மழைக்குன்றமனையான், நகர்-2
மழைக்கை, பள்ளி-67
மழைகாணு மணிநிறம், குகப்-26
மழை நுழைதரு மதி பிதிர்த்தல் x கற்றையிற் சொருகியமாலை சிதைத்தல், மந்தரை-85
மழைமுகில், மந்திர-57
மழைமுகிலோ வடிவு, கங்கை-1
மழையனையான், கங்கை-58
மழையேந்தியகுழல், கங்கை-6
மழையையுதிர்ப்பது கடுவன், சித்திர-14
மழையொடு கலைபுறத் தாழ, மந்திர-58
மள்ளர், பள்ளி-21
மற்பகமலர்ந்ததோள், பள்ளி-52
மற்றடந்தானை, நகர்-166
மறக்கண்வீரன், கங்கை-52
மறத்தல், நகர்-212
மறத்தார் - கொடுமையையுடையவர், மந்தரை-75
மறந்தும் பொய்யிலனுக்குதல், நகர் 17
மறப்பு, மந்திர-23
மறம்-வீரம், மந்தரை-67: அதருமம், தைல-50: கொடியதொழில், திருவடி-27
மறிகடல், ஆறுசெல்-45
மறிகடலோவடிவு, கங்கை-1
மறிதல்-வெட்டப் பெறுதல், சித்திர-18
மறிதிரைக்கடல், மந்திர-13
மறு, நகர்-85, குகப்-62
மறுக்கு - மனக்கலக்கம்: பள்ளி-109
மறுகு-வீதி: நகர்-203
மறுகுதல்- கலங்குதல்: நகர் - 69, 235, தைல - 62: புரளுதல், நகர்-97

யர்னையீட்டம் புரை சுற்றத்தான், கங்கை-30
யுகம்-கற்பம், குகப்-11
யோகரும்துயருழந்தார், நகர்-217
யோகி, சித்திர-11
யோகு-உலகத்தைப்பாதுகாக்குஞ் சிந்தனை, மந்திர-5
யோனிகள், நகர்-78, திருவடி-76
வகிர்த்திங்கள்-பிறைச் சந்திரன்: கங்கை-18
வகிர்தல்-பிரிதல், நகர்-189
வகுத்தல்-படைத்தல்: தைல-4
வகைதல் - வகைப்படுதல்: மந்தரை-60
வங்கநீர்க்கடல், குகப்-50
வங்கம் கூம்பொடு வேலை படர்தல் x யானை கை யெடுத்து நீட்டி நீந்துதல்: குகப்-49
வங்கியம் - இசைக்குழல்: கைகேசி-60
வச்சிராயுதம், கங்கை-34
வசிட்டமாமுனிவன்,திருவடி-118
வசிட்டன், மந்தரை-2
வசிட்டன் அந்தணர்குழாத்தொடு தேர் மிசை போதல், மந்திர-76
வசிட்டன் இராமபட்டாபிஷேகத்தை யுடன் பட்டுக்கூறல், மந்திர-36-43
வசிட்டன் ஈமக்கடன் செய்ய வந்த பரதனைத் தடுத்தல், பள்ளி-132
வசிட்டன் கைகேயியைக் கண்டித்தல், நகர்-44, 46
வசிட்டன் சாட்சியாயிருக்கக் கைகேயியையும் பரதனையுந் தசரதன் துறத்தல், நகர்-50
வசிட்டன் தந்தையிறந்தது குறித்து வருந்தலாகாதென வுபதேசித்தல், திருவடி-70-79
வசிட்டன் நகரத்தவரின் துயர் தணித்தல், தைல-86
வசிட்டன்போய்ச் சொன்னால் இராமன் கானகஞ் செல்லானென்று தசரதன் கருதுதல், நகர்-68
வசிட்டனைத் தசரதன் புகழ்ந்தது, மந்திரப்-46
வசை, நகர்-42, கங்கை-72
வசைக்கசைதல்-பழிக்கு வாடுதல்: திருவடி-114
வசைகொண்டாள், பள்ளி-78
வசைப்பொருள், கைகேசி-19
வசை பெற்றவர் பிறந்த பயனை யடையாதவர், மந்திர-30
வஞ்சம்-கபடம்: கைகேசி-9
வஞ்சமில்லாமனத்தான்-தசரதன்: தைல-71
வஞ்சனை, நகர்-189
வஞ்சனையாலரசெய்திய மன்னர், குகப்-14
வஞ்சி, மந்தரை 67, கங்கை-56
வஞ்சி இடைக்குநாணுதல், கங்கை-20
வஞ்சி சென்றிறுத்தவன்-எதிர்த்த பகைவன்: பள்ளி-109
வஞ்சித்த பேதை-கைகேசி, நகர்-113
வட்டம், தைல-8, சிலாவட்டம்: சித்திர-8
வடங்கொள்பூண், சித்திர-4
வடதிசை, கங்கை-75
வடதிசை வரும்போது இராமன் வருவேனெனல், கங்கை-75
வடமணிமுலை, வனம்-15
வடவனல், தைல-87
வடவனலையஞ்சி வேலைகடவாத கடல் x முனிபணியால் வைகிடும் நகரம்: தைல-87
வடி-கூர்மை, திருவடி-22
வடிக்கணை, திருவடி-37
வடிசிலை, கங்கை-47
வடித்தல்-திருத்திச்செய்தல், வனம்-31
வடிதல்-அழகுபெறுதல், தைல-67
வடிநெடுங்கண், பள்ளி-10
வடிவு, கங்கை-1
வடு-குற்றம், சித்திர-30
வண்டலிடுதல், நகர்-184
வண்டாடுதார், நகர்-25
வண்டு, கைகேசி-6. x கருவிழி: மந்திர-56 x இருந்தை, வனம்-8
வண்டு கண்ணும் உள்ளமும்,மந்திர-52
வண்டுகுழலின்படி சுழலுதல், கங்கை-8

வரைபுரையகலம், மந்திர-57
வல்லர்-வித்தகர்: பள்ளி-13
வல்லிக்கொடி, வனம்-18
வல்லிதாங்கமை, சித்திர-13
வல்லை-விரைவு:காடு என்பாருமுளர்: வனம்-42
வல்லையின், கைகேசி-78
வலங்கடிந்து-வலியைவிட்டு: நகர்-192
வலங்கொள்ளுதல்-பிரதட்சிணஞ் செய்தல்:மந்திர-99
வலத்தான் மதியான் வைத்தெண்ணு நின்றார், கைகேசி-40
வலம் - வெற்றி: பழமுமாம்: நகர்-128
வலவன்-சாரதி: குகப்-64
வலித்தல் - உறுதி கொள்ளுதல், தைல-74
வலித்தல் - சொல்லுதல், மந்தரை-70
வலியபுல், குகப்-40
வலியனென்னுதல், பள்ளி-3
வலியனோ என்று சேமம் விசாரித்தல், திருவடி-56
வழக்கிற் பொய்த்துளோன், பள்ளி-104
வழக்கு, மந்திர-48
வழங்குதல் - சொல்லுதல்: மந்தரை-68
வழாமல், திருவடி-12
வழி, மந்திர-24; இடம் பள்ளி-51
வழிக்கொளாமுன்னம், கைகேசி-84
வழிச் செல்வார், ஆறுசெல்-54
வழிபாடு - பணிவிடை: நகர்-24, கங்கை-63
வழியிடையிலே மகளிரை ஆறலைப்பார்க்குக் காட்டிக்கொடுத்துத்தன்னுயிர்கொண் டேகினேன், பள்ளி-106
வழியுடைத்தாய் வரும் மரபு, பள்ளி-14
வழிவருதருமத்தை மறத்தல், பள்ளி-108
வழுக்குதல், நகர்-194
வழுத்துதல்-துதித்தல், கொண்டாடுதல்: நகர்-239
வழுவுதல், கங்கை-69, குகப்-88
வள்-உறை: ஆறுசெல்-7
வள்ளல்; கங்கை-36, பள்ளி-122, 123, திருவடி-34
வள்ளற்றனம், நகர்-62
வள்ளிநுண்ணிடை, கங்கை-19
வள்ளுகிர்ப்புலி, குகப்-10
வள்ளுவர், மந்தரை-25
வள்ளுறை, மந்திர-59
வள்ளைமாக்கள் - செல்வர், மங்கலபாடகருமாம்: பள்ளி-32
வளைகள், சித்திர-29
வளைதெரிதல், கைகேசி-64
வளைந்துகிடக்கும் வேங்கைக்கொம்பு காலிற் பணிந்தெழுவது மானும், சித்திர-16
வளைமுகத்தனவாசி, பள்ளி-12
வற்கலை-மரவுரி, நகர்-147, வனம்-88
வற்கலையினுடையான், குகப்-29
வற்புறுத்துதல், நகர்-16; தைரியப்படுத்தல், நகர்-20; உறுதிப்படுத்தல், நகர்-16
வற்றுநீர், தைல-57
வற்று, நகர்-61
வறத்தல்-வற்றச்செய்தல், மந்திர-93; வற்றுதல், நகர் - 177, சித்திர-19
வறிஞர் பொன்னைப்பெற்றுப் பிழைத்தவர் x இராமனைப்பெற்றுக் காட்டுக்குச் செல்லுமாறு இழக்கும் கோசலை, நகர்-13
வறியன், பள்ளி-55
வறியன வணுகுதல்,குகப்-57
வறியோர்தனம், நகர்-31
வறுத்தல், வனம்-40
வறுமை - இல்லாமை, தாரித்திரியம்,மந்தரை-72,நகர்-215, தைல-51
வன்கண், நகர்-64
வன்கண்மை-கொடுமை, தைல-75
வன்கணுலோபர், பள்ளி-26
வன்கேகயர்கோன் மங்கை, நகர்-36
வன்பழி, பள்ளி-82
வன்புலக் கன்மன மதியில் வஞ்சன், தைல-23
வன்மாயக்கைகேசி, நகர்-72
வன்மை மறப்பயனன்று, தைல-80

விரித்தநாணல், கங்கை-50
விரித்தல்-விளங்கச் சொல்லுதல்: மந்தரை-33
விரிதல் - பரத்தல், விளங்குதல்: கைகேசி-100
விரிதிரைப்புனற்கங்கை, கங்கை-9
விரியிருள், கங்கை-19
விருகம்-செந்நாய், கொடுவிலங்கு: நகர்-83
விருத்தமாதவர், கங்கை-42
விருத்தர் - வயசுசென்றவர்: ஆறுசெல்-5
விருத்தி-அறுதொழில்: வளர்ச்சி, குகப்-73
விருத்தேசனன், நகர்-79
விருந்தினன், சித்திர-39
விருந்து, கங்கை-27, தைல-68
விருப்பு, பள்ளி-40
விரும்பலர், பள்ளி-116
விரும்பிய - விரும்பும்பொருட்டு: மந்திர-18
விரை-வாசனை, நகர்-161
விரைவின், மந்திர-50
விரைவு, மந்திர-51
விரைவோடு, நகர்-91
வில் × நுதல்: வனம்-12
வில்லிணைத்துயர்ந்ததோள் வீரன், ஆறுசெல்-58
வில்லார்தோளான், பள்ளி-82
வில்லாலுமாவல்லாய், நகர்-57
வில்லாள், குகப்-15
வில்லி-வில்வீரன்: சித்திர-13
வில்லின்கல்வி-தநுர்வித்தை: குகப்-8
வில்லின்விரிந்த ஆண்டொழில்: பள்ளி-113
வில்லின்வேதம், பள்ளி-13
வில்லினம் - தொகுதியானவில், கங்கை-71
வில்வாளையொழித்துத் தவப்பள்ளிவாயிலே நண்ணுதல், கங்கை-37
வில்வினையுரிமை, மந்தரை-62
விலங்கல்-மலையும் மிருகமும்: கைகேசி-71
விலங்கல்தோள், மந்திர-62
விலங்கற்றிண்டோள், குகப்-67
விலங்கன்மாளிகை, மந்திர-51
விழவெழுமொலி, நகர்-210
விழாப்போதுதல், பள்ளி-28
விழி - கண், நகர்-152, கங்கை-5, × சேல்: கங்கை-24
விழிக்குங்கண் இராமனையன்றி வேறில்லாதவன் தயரதன், நகர்-49
விழிகொள்ளாவண்டு, வனம்-13
விழித்தகண்ணன், கங்கை-54
விழித்தனள், மந்தரை 54
விழிபுனல்பொழிகண், கங்கை-58
விழியினெய்தகோல், ஆறுசெல்-50
விழிபோயிற்றின்றென்றூர், நகர்-89
விழுங்குதல் -உயிர்ப்பை உட்கொள்ளுதல்: நகர்-11
விழுந்தரற்றுதல், திருவடி-40
விழுந்தாள், நகர்-9
விள்ளாநிலைநோன்பு, நகர்-58
விளக்கு × சீவன், திருவடி-75
விளங்கிழை, சித்திர-17
விளிதல்-அழிதல்; திருவடி-79
விளைகட்டி, கங்கை-5
விளைப்பது, பள்ளி-60
விளையாடினள், கங்கை-6
விளைவு-முடிவு, நகர்-35
விற்கொள்வாணுதல், சித்திர-17
விற்றிருநுதன்மாது, வனம்-12
விறலி, பள்ளி-4
வினை-கபடம், தந்திரம்: மந்திரப்-71, செயல், நகர்-31, திருவடி-109
வினைக்கழியாமை மந்திரிகுணம், மந்திர-9
வினைத்திறம், பள்ளி-60
வினைதிரம்புதல்-காரியம்முற்றுதல், மந்தரை-79
வினைமுடித்தவன், பள்ளி-144
வினையினீங்கியவேதியர், சித்திர-39
வினையேன், நகர்-56, 65
வினைவென்றோர்மேவிடம், வனம்-19
வினைவேரறவென்றுயர்வான், நகர்-43
வீ-மலர்: சித்திர-42
வீங்குதல்-வளர்தல், கைகேசி-100: மயக்கம்மிகுதல்: நகர்-9
வீங்குதோளண்ணல், வனம்-36
வீச, சித்திர-14
வீட்டுண்டு=விட்டுண்டு, அம்புவிடுப்பட்டு, விகாரமின்றி, கொல்லப்பட்டு எனினுமாம்: நகர்-84.

அரும்பதவகராதி முதலியன முற்றும்.